991. பேயாழ்வாருடைய திருவந்தாதியில் (14). *மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு* என்கிற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு விஷயாந்தரவைராக்ய அப்யாஸம் நிகழ வேணும்.

992. நான்முகன் திருவந்தாதியில் (63) *தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது* என்ற பாசுரத்தை ஸாரமாகக் கொண்டு அவ்விதமாகவே போது போக்கி வரவேணும்.

993. திருவிருத்தத்தில் (97) * தொல்லைமாலைக் கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே* என்ற பாசுரத்தை நித்யாநுஸந்தானம் பண்ணியிருக்க வேண்டும்.

994. திருவாசிரியத்தில் (2) *மாயாப்பெரு விறலுலகம் மூன்றினொடு நல்வீடு பெறினும், கொள்வதெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே* என்றபடி *த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குச விபூதிகர்களாயிருக்க ஆசைப்பட வேண்டும்.

995. பெரிய திருவந்தாதியில் (86) *சீர்கலந்த சொல் நினைந்து போக்காரேல் — என்னினைந்து போக்குவரிப் போது* என்றபடி போதைப் போக்குவதற்கு பகவத்குணநுபவ மொழிய வேறொரு உபாயமில்லை யென்று துணிந்திருக்க வேணும்.

996. திருவெழுகூற்றிருக்கையில் *அறுதொழிலந்தணர் வணங்குந் தன்மையை* *நெறிமுறை நால்வகை வருணமுமாயினை* என்கிற சந்தைகளை அநுஸந்திப்பதற்குப் பலன் வர்ணாச்ரமாசாரங்கள்வழுவாமேயிருப்பதுதான் என்று கொண்டிருக்கவேணும்.

997. சிறிய பெரிய திருமடல்களைச் சிந்தித்து, ஸ்வரூபவிருத்தமாக மடலூர்ந்தாகிலும் எம்பெருமானைப் பெறவாசைப்பட்டு *நானவனைக் காரார் திருமேனி காணுமளவும் போய்ச், சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே....* என்று திவ்யதேசங்கள் தோறும் புக்குப் புறப்படுவதே பேறென்று உறுதிகொண்டிக்க வேணும். மடலூர்வது திவ்யதேசாநுபவம் பெறுவதற்கே.

998. திருவாய்மொழியாயிரத்தில் புகுவதற்கு முன்னே *ஏய்ந்த பெருங்கீர்த்திராமானுச முனிதன், வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன், ஆய்ந்த பெருஞ்சீரார்சடகோபன் செந்தமிழ்

வேதந்தரிக்கும் பேராதவுள்ளம்பெற* என்றனுஸந்தித்து *மிக்க விறை நிலையும் மெய்யா முயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்* என்றுமநுஸந்தித்திருக்கு மத்தனையே போதும். "உண்டோ திருவாய் மொழிக்கொப்பதோர் கலைதான்".

999. இராமானுச நூற்றந்தாதியில் (107)* இன்புற்ற சீலத்தி ராமானுச ! - உன்தொண்டர்கட்கே அன்புற்றிருக்கும்படி என்னை யாக்கியங்காட்படுத்தே* என்ற ஓர் பாசுரத்தின் அநுஸந்தானமே தலை சிறந்து நிற்கவேணும்.

1000. மணவாள மாமுனிகளருளிச் செய்த உபதேச ரத்தின மாலையில் *அன்னபுகழ் முடும்பை யண்ணலுலகா சிரியன்* என்று தொடங்கி (53-59) ஏழுபாட்டுக்களால் வெளியிட்டருளின ஸ்ரீவசன பூஷண திவ்யசாஸ்த்ரப் பெருமையை நிச்சலும் சிந்தித்திருப்பதே ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தஞ்சமாகும். *எல்லார்க்கு மண்டாத தன்றோவது.*

1001. மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் எம்பெருமானார்க்குத் திருநாள் பாட்டு அருளிச் செய்கையில் "ஆழ்வார்கள் தாங்களவதரித்த நாள்களிலும் வாழ்வான நாள் நமக்கு - சித்திரையில் செய்ய திருவாதிரை" என்றருளிச் செய்தார். மணவாள மாமுனிகளைப் பற்றிப் பேச வேண்டில் "ஆழ்வாரு மாரியரு மவதரித்த நாள்கள் தமில் வாசாம கோசரநாள் ஐப்பசியில் திருமூலம்" என்றநுஸந்திக்க வேணும். *அல்லும் பகலு மனுவிப்பார் தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்த நல்ல மணவாள மாமுனிவன்* திருவருள் கண்டீர்! இவ்வுலகினில் மிக்கது - என்றே அநுஸந்தித்திருப்பர் அறிவிற் சிறந்த ஆரியர்கள்.

அண்ணாஸ்வாமியின் அமுதமொழியாயிரத்தின் பிற்பகுதி முற்றிற்று.

நம் அண்ணாஸ்வாமியின் அமுதமொழிகள் ஓராயிரமன்று
ஈராயிரமன்று நாலாயிரமுமன்று ஆயிரமாயிரமாய்ப்
பலவாயிரம் பெருகும்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.